# கிறுக்கலும் அழகு

Venkatesh kumar.g

**“விடியும் வரை காத்திரு**

**இல்லையென்றால் சூரியனை விழுங்கிடு”**

## நன்றிகள் பல:

என்னை பெற்றுஎடுத்த என் தாய் தந்தைக்கு என் முதல் நன்றி

என்னுடன் சக உயிராய் பிறந்த என் தங்கைக்கு நன்றி

இந்த புத்தகத்தின் தலைப்பை எனக்கு பரிசளித்த என் மனைவிக்கு நன்றி

என்னை ஒரு இயக்குனராக உருவாக்கிய என் குருநாதர் பாலுமகேந்திராவுக்கு நன்றி

என் படைப்புக்களை வெற்றி பெற செய்த என் ரசிகர்களுக்கு நன்றி

எனக்கு வாழ்க்கையை கற்றுக்கொடுத்த இந்த உலகத்துக்கு நன்றி

கடைசியாக என்ன எழுத்தாளனாக மாற்றிய இந்த சமுதாயத்துக்கு நன்றிகள் பல!!!

**“விடியும் வரை காத்திரு இல்லையென்றால் சூரியனை விழுங்கிடு”**

# முன்னுரை:

இந்த புத்தகத்தை எழுத ஆரம்பித்த பிறகு சற்று தயக்கமே எனக்கு ஏன் என்றால் நான் ஒரு எழுத்தாளன் அல்ல எனக்கு படம்பிடிக்க தான் தெரியும் சற்று யோசனைக்குப்பின் பின் எழுத ஆரம்பித்தேன் அதன் பின் நிறுத்தவில்லை.

நான் இந்த புத்தகக்த்தில் நிரப்பி இருப்பது என் எண்ணங்களின் பிரதிபலிப்பே தவிர வேறு ஒன்றும் இல்லை. இந்த சமுதாயம் ஒரு மனிதனை மாற்றும்,இந்த சமுதாயம் என்னை எழுத செய்தது.

சமுதாயத்தில் உள்ள ஏற்ற தாழ்வும், வறுமையும், வன்முறையும், பசி பட்டினியும் என்னை ஒரு எழுத்தாளனாக மாற்றியது...

நான் தேடுவது ஒரு மாற்றத்தை, அந்த மாற்றம் ஒரு ஏழையை உயர்த்தும், அவன் பசியை போக்கும், அவன் வறுமையை அகற்றும்,

என்று ஒரு மனிதன் தன் சக மனிதனை அவனின் நிழலாக பார்க்கிறானோ அன்றே இந்த உலகம் விடியல் பெரும்!!!

எத்தனை நாட்கள் தான் ஏழை வறுமையிலும், பணக்காரன் அதிகாரத்திலும் வாழ்வது.

இந்த வையகம் மிகவும் அழகு, அதை நாம் அழகா பார்ப்பது நம் கண்களில் தான் உள்ளது

இந்த புத்தகத்தில் உள்ள சொற்கள் யாவும் என் மனதில் இருந்து எழுந்தவை எழுத்துக்களாக.

இயற்கை எனக்கு அளித்த மிக சிறந்த காட்சிகளை தான் நான் இந்த புத்தகத்தில் பதிவு செய்து இருக்கிறேன்

அதே போல் இந்த சமுதாயம் எனக்கு காண்பித்த பல சோக காட்சிகளையும் பதிவு செய்து இருக்கிறேன் கிறுக்கல்களாக

வா, கை கோர்த்து செல்வோம் இந்த புத்தகத்தினுள்!!!

## விண்ணில் கலக்க ஆசை:

நான் கண்முன் பார்த்த ஓவியம் மறைந்துவிட்டது

அதன் பெயர் வாழ்க்கை

நான் தினமும் ரசித்த தருணமும் மறைந்துவிட்டது

அதன் பெயர் இளமை

நான் கண்டெடுத்த முத்து புதைந்துவிட்டது

அதன் பெயர் காதல்

நான் சேர்த்த செல்வமும் தொலைந்துவிட்டது

அதன் பெயர் வேலை

எனக்காக ஏங்கவோ நினைக்கவோ ஆள் இல்லை

அவர்கள் எல்லாம் இயங்கிகொண்டு இருக்கிறார்கள்

நான் எழுதி கொண்டு இருக்கிறேன்

என் வாழ்கையை!!!

படிப்பதற்கு ஒண்ணும் இல்லை இதில்

நாளை நீ காணப்போகும்

நீல வானமும்

மஞ்சள் ஒளியும்

நீண்ட கடலும் தான்

என் முன்னால் நடனம் ஆடிக்கொண்டு இருக்கிறது !!!

அதே நாடகம்

அதே மேடை

கதா பாத்திரங்கள் வேறு....

பார்போம் வெகு விரைவில்

மீண்டும் கருவறைக்குள்!!!

நன்றி!!!

## அம்மா:

அவள் உன்னை பிறப்பதற்கு முன்பே பார்க்கிறாள்

அவள் வலி உணர்ந்தவள்

அவள் பிரபஞ்சத்தை அறிந்தவள்

அவள் கண்கள் உறங்காது

அவள் மூச்சும் நிற்காது

அவள் இன்றி ஒரு அணுவும் அசையாது

அவளே தாய் என்ற தெய்வம்!!!

## கம்யூனிசம்:

வா என்றது ஒரு கை
வா தோழா என்றது ஓர் குரல்

வா என்னிடம் உணவு பகிர்ந்துகொள்
என்றது ஓர் ஆத்மா

கம்யூனிசம் காகிதத்தில் இல்லை
நம் உள்ளங்களில் உள்ளது

நான் சென்று வருகிறேன் என்றதும்

வீட்டுக்கு வா தோழா!!!
என்றது ஒரு கடவுள்.
அந்த கடவுள் தங்கும் இடமோ ஒரு கூரை

கம்யூனிசம் ஒரு கட்சி அல்ல
ஒரு எண்ணம்
ஒரு கொள்கை
ஒரு பாதை!!

## இளமை:

அந்த வானத்தின் மீது கோபம் கொண்டேன்

அந்த மழையின் மீதும் காதல் கொண்டேன்

சிறுநதியின் நடுவே எனது பள்ளிக்கூடம்

அங்கு பறவைகள் பாடும்,

ஒய்யாரமாய் கிளைகளின் நடுவே

அண்ணார்ந்து பார்த்த எனது கண்கள் இமைக்க மறந்துவிட்டன!!!

பள்ளிக்கூடம் தான் எனது மாய கண்ணாடி..

மணி ஓசை!!!

வேகமாக சென்றேன்...

நான் சுவற்றில் ஒட்டி வைத்த காகித கிளிகளை காண!!!

உறக்கமும் அவர்களின் அருகில் தான்

கண்விழித்த படியே

நாளை காலை சிறு கிளைகளில் உல்லாசமாய் நடனமாடும் அந்த பறவைகளை காண!!!

இளமை நான் பார்த்த உலகம்

எனக்கு மட்டும் தான் சொந்தம்

அந்த அழகை நான் மட்டும் காண்பேன்

என் சக பயணி உடன்!!!

## உண்மை:

நீ பார்த்த காட்சிகள் பொய்

நீ ரசித்த வர்ணம் பொய்

நீ வாங்கிய மகுடம் பொய்

நீ தழுவிய அன்பும் பொய்

உன் பிறப்பு நிஜம்

உன் இறப்பும் நிஜம்

இடையில் ஒரு சிறு விழிப்பாய் உன் வாழ்க்கை!!!

விழிக்க மறுக்காதே

இமைக்க மறுக்காதே

உண்மையை அறிந்துகொள்

நீ நிரந்தரமானவன்

அந்த “நீ” என்ற ஆத்மாவை உணர்ந்துகொண்டால்!!!

## கனவு:

உன் கண்முன் சிறு சிறு காட்சிகளாய் வந்து தேயும்
இந்த மின்மினி பூச்சியே உந்தன் கனவு!!!

கனவுகள் பொய் அல்ல
கனவுகள் உண்மையே

வேகமாக வந்து மறையும் அந்த காட்சிப்பிழை
உன் வாழ்க்கையில் உன் ஆத்மாவால்
செல்லக்கூடிய இடங்களே தவிர
வேறொன்னும் இல்லை!!!

கனவையும் நிஜைத்தையும் பிரிப்பது உன் இமைகள் மட்டுமே!!!

உன் பிறப்பின் பாதையில்
பயணிக்கும் பொழுது
பார்க்கும் படமே
இந்த கனவு என்ற நிழல் உலகம்!!!

## கலை:

இந்த வெளிச்சத்தை காணும் வரை உன் வாழ்க்கை இருளில்

அந்த வெளிச்சம் உனக்கு உன் வாழ்க்கையை அறிமுகம்படுத்தும்

நீ காண்பாய் ஒரு மின்னல் போல் உன் வாழ்க்கையை

அது அழகு அழகு அழகு!!!

கலை உன்னை உண்ணும்

உன்னை உண்ண உன் அம்மாவுக்கு உரிமை இல்லையா?

கலை என் மரணமில்லா தாய்!!!

## சினிமா:

இந்த வெளிச்சத்தை நம்பி விழும் வீட்டில் பூச்சிகள் ஏராளம்

வெப்பத்தை முத்தமிடும் பறவைகள்

அதை நம்பி வாழும் உயிர்கள் ஏராளம்!!!

எல்லோரும் ஜெயிப்பதில்லை

எல்லோரும் ஜெயிக்க அனுமதிக்கப்படுவதில்லை

ஒரு கலைஞனை பணம் வாங்குகிறது

அவன் குடும்பத்தை விலைபேசுகிறது

அவன் கஷ்டத்தை முத்தமிடுகிறது

அவன் விழுகிறான் அந்த வெளிச்சத்தில் ஒரு வீட்டில் பூச்சியாய்!!!

ஐந்தாறு வயிறுகள் நிறைய!!!

## விழித்திரு தமிழா:

உன் இமைகள் உறங்காமல்
உன் மூச்சு நிற்க்காமல்
உன் குரல் மட்டுமே ஒலிக்கும் இந்த தேசத்தில்
நீ சுறண்டப்படுகிறாய்!!!

உன்னை அறியாமல் உன் தேசம் விழுங்கப்படுகிறது
உன் தாய் மண் விற்கப்படுகிறது
உன் கலாச்சாரம் அழிக்கப்படுகிறது
விழித்திடு!!!

நாளை நீ விழிக்கும் பொழுது உனதாகவே இருக்கட்டும்
உன்னிடம் உள்ளது ஒன்றே ஒன்று தான்
நீ தமிழன் என்கிற ஒரு அடையாளம்!!!

அது ஒரு அழியா விதை
விழித்திடு விழித்து எழுந்திடு!!!

நாளை சூரியன் உதிக்கும் உனக்காக

நிலா தவழும் உனக்காக

நட்சத்திரம் எரியும் தமிழனுக்காக

வா வந்து கைசேரு என்னோடு

நாளை நமதே!!!

# இயற்கை:

என்றுமே அழியா இயற்கைக்கு ஒரு கர்வம் உண்டு

நானே அழகன்

நானே அழகி

நானே கடவுள்

நானே எல்லாம்!!!

இயற்கை கடவுளின் பூந்தோட்டம்

இயற்கையை நேசி

அது ஒரு அழியா வர்ணஜாலம்

அந்த நீல முகம் கொண்ட வானமும்

அந்த மண் மீது தவழும் நதியும்

எப்பொழுதும் நடனம் ஆடிக்கொண்டே இருக்கும் அந்த காற்றும்

உன்னிடம் விளையாடும்.

நீ இயற்கையை நேசிக்கும் பொழுது!!!

## வெற்றி:

ஆயிரம் தோல்விகளுக்கு பின்னால் மறைந்திருக்கும்

ஒரு தேவதையே இந்த வெற்றி!!!

நீ தொட நினைக்கும் போதேல்லாம் உன்னை விட்டு மறைந்திடும்

நீ அதற்காக காத்திருக்கும்

ஒவ்வொரு நொடியும் உண்மை என்றால்

உன்னை மறவாமல் உன்னிடம் வந்து சேரும்!!!

வெற்றி வந்த பின் தோல்வியை மறவாதே

தோல்வி இல்லையெனில் வெற்றி இல்லை

வெற்றி இல்லையெனில் தோல்வி இல்லை!!!

## சினிமா பட்டறை:

வெளிச்சத்தை உருவாக்கும் ஒரு ஒளி ஓவியன்

உணவு தயாரிக்கும் ஒரு ஏழை தாய்

கலைஞர்களை சேர்க்கும் ஒரு காந்தம்

முகத்தை உருவாக்கும் ஒரு முக ஓவியன்

அகத்தை உருவாக்கும் ஒரு ஆடை கலைஞன்

மாய உலகத்தை உருவாக்கும் ஒரு கலை ஓவியன்

வாழும் உயிர்களாய் நடிகர்கள்

படம்பிடிக்கும் இரு கண்கள்

படம் பிடிக்க சொல்லும் ஒரு படைப்பாளி

சினிமா தயாரிக்க படுகிறது

பல வேர்வை துளிகளின் ஆசை கனவுகளோடு!!!

## பாரதி:

அன்று பிறந்த முண்டாசு கவிஞன் நீ
உனக்கு சகலமும் தெரியும்
அதனால் சென்றுவிட்டாய் சீக்கரமாக!!!

அந்த காக்கை சிறகினிலே நந்தலாலாவை கண்டவன் அல்லவா நீ
அன்று உலகம் உன்னை மதிக்க மறந்தது
இன்று உலகம் உன்னை நினைக்க மறக்கவில்லை!!!

நீ விட்டுச்சென்ற தமிழ்
இன்றும் ஒரு போதையே!!!

நீ கிறுக்கி சென்ற கவிதைகள் ஏராளம்
உன்னை போற்ற பராசக்தி வரவேண்டும்

இந்த வையகத்தை காக்க
அந்த சக்தியை நீ கவிதைகளாய் விட்டு சென்றாய்
நாங்கள் அதை சுவாசித்து கொள்கிறோம்!!!

எங்கள் பிள்ளைகள் கற்பது உன் கவிதைகளை தான்

அவர்கள் பள்ளிகூடத்தில் காண்பது உன் முகத்தை தான்

முண்டாசு கவிஞனே உனக்கு மரணம் இல்லை!!!

உனது கடைசி கிறுக்கலாக வந்த

“மனிதனுக்கு மரணம் இல்லை”

போல்!!!

## போராளி:

ஒரு போராளியின் மனம் பூவை போல்
ஒரு போராளியின் குணம் சிறு தீயை போல்

அவன் கொள்கைக்கு அடிமை
அவன் முதலாளிகளுக்கு அல்ல!!!

அவன் சிந்தனை நேராக இருந்தது
அவன் பார்வை கூர்மையாக இருந்தது
மின்னும் அம்புகள் போல!!!

அவன் உண்மைக்கு உழைத்தவன்
அவன் சக தோழனின் வாழ்க்கையை உயர்த்தியவன்

அவன் பயம் அறியான்
அவன் மரணத்தை முத்தமிட தயாராக இருந்தான்
அவன் சக உயிரின் விடியலுக்காக!!!

அவன் விதைத்த விதைகள் யாவும்
முதலாளிகளின் இரும்பு கதவுகளை தகர்க்கும்!!!

அவர்களின் கர்வத்தை அழிக்கும்

போராளி தீவிரவாதி அல்ல

அவன் ஒரு உண்மை மனிதனே!!!

## பிறப்பு:

நீ வந்து விழுந்தாய் இந்த பூமியில்

ஒரு விடிவெள்ளியாய்!!!

ஒரு வலி

ஒரு குரல்

ஒரு ஜனனம்!!!

ஆஹா வந்துவிட்டான் நம் முடி சூடா அரசன்!!!

சூரியன் சிரிக்கிறது

நிலா வெட்கப்படுகிறது

ஒரு அழகிய பிறப்பு நிழந்து இருக்கிறது

பூமியில் வெளிச்சம் உண்டாக!!!

## வானம் வசப்படும்:

அந்த வானம் சிரித்திடும் உன் நேர்மையை பார்த்து
அந்த மரங்கள் வழிவிடும் உன் நடையை பார்த்து

நீ செல்வது போர் செய்ய அல்ல
நீ செல்வது மின்னலை கட்டித்தழுவ

உன் வார்த்தைகளில் உண்மை சீறிப்பாயும்
நீ போராடு உனக்கு நியாயம் கிடைக்கும் வரை
அந்த வானம் உனக்கு வசப்படும் பின்னே!!!

## அகதி:

நாங்கள் முகவரி தேடும் பறவைகள்
எங்கள் வீடுகள் மண்ணில் புதைந்தன
எங்கள் சந்தோசம் பறிக்கப்பட்டது

கனவிலும் துப்பாக்கி சத்தம்
பயம் எங்களை கட்டித்தழுவி கொண்டது

நாங்கள் இறக்கைகள் வெட்டப்பட்ட பறவைகள்
எங்கள் மூச்சில் எங்கள் மண்வாசம்
அந்த காற்றில் எங்கள் பிள்ளைகளின் மழலை
அதை சுவாசித்து கொண்டு வாழ்கிறோம்!!!

நாங்கள் அகதிகள் தான்
அடிமைகள் அல்ல!!

நாங்கள் எங்கள் தாயிடம் சேரும் காலம் வெகு தூரத்தில் இல்லை
அது வரை நாங்கள் அகதிகளாய்
உயிரை உள்ளங்கையில் பிடித்து கொண்டு வாழ்கிறோம்!!!

சந்தோசம் அது வெறும் பகல் கனவே

நாளை விடியும் என்று இமைகள் மூடாமல் உறங்கிகொண்டு இருக்கிறோம்!!!

## போர்:

மனிதன் மிருகமாகும் இந்த தருணம்

சக மனிதனின் ரத்தத்தை ருசிக்க துடிக்கும் ஒரு எண்ணம்

அதற்கு போர் என்ற பெயர்

குண்டுகள் சத்தம்

துப்பாக்கிகளின் வேட்டை

அங்கு வேட்டையாடப்படுவது மனித உயிர்

உங்கள் வியாபார போரில்

எங்கள் குழந்தைகளை விற்க்காதீர்!!!

அவர்கள் ஒன்றும் அறியா ஆத்மாக்களே.

உங்கள் சர்வாதிகார போரில் பலியாவது இந்த ஏழை மனிதர்களே

நாங்கள் உறங்க மறந்திட்டோம்!!!

பள்ளிக்கூடம் இன்று மயானபூமி ஆகி விட்டது

கோவில்கள் பாலைவனம் ஆகிவிட்டன

போர் வேண்டாம் !!!

மக்களை வாழ விடுங்கள்

அவர்கள் சிரிக்க மறந்து பல வருடம் ஆகி விட்டன!!!

போர் செய்

இனி அமைதி என்ற ஆயுதத்தை வைத்து!!!

## வண்ணத்துப்பூச்சி:

ஒரு புழுவில் இருந்து உயிர் பெரும் தேவதை அல்லவா நீ

உன் சிறகுகளில் உறங்க எனக்கு ஆசை

எத்தனை வண்ணம்

எத்தனை அழகு!!!

நீ பூவிடம் காதல் கொள்ளும் பொழுதை நான் ரசிக்க வேண்டும்

உன்னோடு அந்த அழகிய மெல்லிய காற்றில் நானும் தவழ வேண்டும்!!!

நீ சிரித்தாள் துடிக்கும் அந்த ரெக்கை போல் நானும் சிரிக்க வேண்டும்!!!

காலம் உன்னை என்றுமே காதலிக்கும்!!!

ஆகையால் நீ என்றுமே அழகிய வர்ணங்களில் பிறப்பாய்!!!

உன்னை காண கோடி கண்கள் வேண்டும்

தருவாயா இயற்கையே எனக்கு?

## பவுர்ணமி நிலா:

இன்று நீ முழ முகத்தை காண்பித்தாய்
எனக்கு ஆயிரம் கண்கள் வேண்டும்
உன்னை கான!!!

நீ சென்ற இடமெல்லாம் நானும் சென்றேன்
நான் சென்ற இடமெல்லாம் நீயும் வந்தாயோ???

உன்னை பார்த்து கொண்டே உணவு உண்ண ஆசை

அந்த கடல் அலைகள் நடனமாடுகின்றன உன்னை பார்த்து
இந்த பிரபஞ்சத்துக்கு ஒரு செல்ல குழந்தை நீ
நீ விளையாடு...

அந்த வானம் உனதே
இந்த பூமியும் உனதே

## ஏழ்மை:

அங்கு ஓடி விளையாடி கொண்டு இருந்த சிறுவனுக்கு தெரியாது அன்று இரவு அவனுக்கு உணவில்லை என்று...

முதலாளிகளுக்கு கல் உடைக்க சென்று இருந்தார் அவன் அப்பா கணவனை எதிர்பார்த்து வாசலில் குடி இருந்தாள் அவன் அம்மா தரையோடு ஒட்டிய வயிற்றோடு படுத்திருந்தாள் அவன் தங்கை

ஏழ்மை அவர்களின் ஜாதி அல்ல
ஏழ்மை அவர்களின் மதம் அல்ல
ஏழ்மை அவர்களின் பாஷை அல்ல
ஏழ்மை அவர்களின் வாழ்க்கை!!!

விளக்கில் வெளிச்சம் இல்லை
அதில் ஊற்ற எண்ணையும் இல்லை!!!

ஏழையின் வாசலில் தினமும் முத்தமிடும் அந்த நிலாவும் இன்று மறைந்துகொண்டது...

அங்கு கல்லுடைக்கும் தொழிலாளிக்கு தெரியும்

அங்கு மூன்று உயிர்கள் காத்திருக்கின்றன என்று

அவன் வருவான் சில காகிதங்களோடு

காத்திருங்கள்!!!

## அப்பா:

எனக்கு நடக்க கற்றுக்கொடுத்தவன் நீ

எனக்கு தைரியத்தை கற்றுக்கொடுத்தவன் நீ

உன் கைகளை பிடித்துக்கொண்டு நான் நெருப்பிலும் நடப்பேன்!!!

எனக்காக சுவாசித்தவன் நீ

எனக்காக வியர்வை சிந்தியவன் நீ

எனக்கு வாழ்க்கையின் உண்மையை உணர்த்தியவன் நீ

நான் ஒரு குழந்தையாக இந்த மண்ணில் விழும் போதெல்லாம்

நீ எனக்கு கை கொடுத்தாய்

நான் ஒரு இளைஞனாக தவறு செய்யும் போதெல்லாம்

நீ எனக்கு நேர் வழியை காட்டினாய்!!!

எல்லா உயிர்களுக்கும் உயிர் கொடுக்கும் கடவுள் நீ

கருவறையின் கடவுள் நீ

அப்பா என்ற அந்த மந்திர சொல்!!!

**மீனவன்:**

விசை படகை எடுத்துக்கொண்டு நீ கடல் அலையில் சீறி பாய்ந்து செல்வது எனோ?

மீன் பிடிப்பது உன் தொழில்

உன்னை வேட்டையாடுவது அவர்களுக்கு வாடிக்கை

நீ கொல்லப்படுவது இந்த உலகத்துக்கு தெரிவதில்லை

உன் மரணம் கணக்கில்லாமல் போகிறது அதற்கு யார் கரணம்?

மீன்கள் வலையில் சிக்கினால் உன் குடும்பத்திற்கு வயிறு நிறையும்

அவர்களிடம் நீ சிக்கினால் அங்கு உள்ள முகாம்கள் நிறையும்!!

கணக்கில்லாமல் போவது உன் உயிர் மட்டுமே

உன்னை போல் ஆயிரம் உயிர்கள்

இன்னும் அடிமைகளாய் வாழ்கின்றன

எங்கோ ஒரு முகாமில்!!!

அவர்கள் குரல் கேட்பதில்லை இந்த அரசாங்கத்திற்கு

அவர்கள் வலி புரிவதில்லை இந்த அமைச்சர்களுக்கு!!!

உங்கள் இரு நாட்டின் உறவு வலுவடைகிறது

அதே சமயம் நாங்கள் பிடிபடுவதும் மரணமடைவதும் உயர்ந்துகொண்டு தான் இருக்கிறது!!!

மீனவன்

அவன் ஒரு கடல் தேவன்

தேவனை கொல்வது அரக்கர்களே!!!

## குழ்நதை தொழிலாளி:

பொம்மைகள் பிடிக்கும் கைகளில் திருப்புளி

பேனா பிடிக்கும் கைகளில் துப்பாக்கி

கரும்பலகையில் எழுதவேண்டியவன் புத்தகத்தை விற்கிறான்

ஓடி விளையாட வேண்டியவன் பாத்திரங்கள் துடைக்கிறான்

வர்ணத்துடன் பழக வேண்டியவன் பட்டாசு செய்கிறான்

புத்தகத்தின் பக்கங்களின் நடுவே இருக்க வேண்டியவன்

கஞ்சா இலைகள் நடுவே இருக்கிறான்!!!

துள்ளி குதிக்க வேண்டிய இந்த கால்கள் இன்று உடைக்க பட்டிருக்கின்றன!

இவன் படிப்பு வெறும் கனவே!!!

பூக்களின் நடுவே உறங்க வேண்டியவன்

சாலை ஓரம் உறங்கிக்கொண்டு இருக்கிறான்

இவன் வாழ்க்கை இவனை ஏமாற்றி விட்டது

இவன் பெற்றோர்களும் இவனை விற்று விட்டார்கள்

இனி இந்த வையகம் இவனை அணைத்துக்கொள்ளும்!!!

## உணவு:

இந்த உடம்பு இயங்க உணவு தேவை

இங்கு உயிர் வாழ உணவு தேவை

உணவுக்காக உழைபவர்கள் பலர்

சிலருக்கு உனவு கிடைக்காமல் செய்பவர்களும் பல!!!

இங்கு உணவின்றி ஒரு அணுவும் அசையாது

தண்ணீரும் ஒரு உணவே!!

உணவை பகிர்பவன் தோழன்

உணவை மதிப்பவன் கடவுள்

அந்த உணவை தயார்செய்பவள் ஒரு தாய்..

எல்லா உயிர்களும் வாழ்வது உணவுண்ண தான்

நீ உணவாக உண்ணும் எல்லா உயிரும் தன் உணவை உன்றுவிட்டு தான்

உன்னிடம் சேர்கின்றது உணவாக!!!

உணவுக்கு ஆரம்பம் இல்லை முடிவும் இல்லை

அந்த நேரத்தை போல!!!

## பாலுமகேந்திரா:

தொப்பி அணிந்த ஒரு கலைஞர்

சினிமா ஓவியர்

யதார்த்த சினிமாவின் தந்தை!!!

இவர் படைப்புகள் காலத்தால் அழியாதவை

இவர் நேசித்தது சினிமாவை மட்டும் தான்

இயற்கையும் இவரை பார்த்து பொறாமைப்படும்

இவரை போல் கண்கள் இல்லையே என்று!!

விருதுகள் பல பெற்றும் தன்னை ஒரு சாமானிய மனிதன் என்றே காட்டிக்கொண்டவர்...

இவர் படைப்புகளில் கவிதை உண்டு

அதில் அழகும் உண்டு!!!

இன்று அவர் மின்னுகிறார் அந்த விண்வெளியில் நட்சத்திரமாக

நம்மை பார்த்துக்கொண்டு!!!

## மரணம்:

உன் உடம்பை விட்டு ஆத்மா பிரியும் நேரம்

நீ உன் வாழ்க்கையை ஒரு குறும்படமாய் பார்ப்பாய்

கண்கள் ஓய்வுபெறுகின்றன

உன் ஆத்மா இந்த காற்றில் கலந்து விடும்

நீ பிறப்பாய் மீண்டும்

நீ கலப்பாய் ரத்தத்தில் ஒரு அணுவாக

பிறகு உயிர் பெறுவாய் ஒரு கருவறைக்குள்!!!

உன் ஆத்மா செல்லும் பாதையில்

வலி இருக்கும்

பூ இருக்கும்

நீ சகலமும் தெரிந்தவனாக இருந்தால்

உன் பாதை சுலபமே!!!

நீ விண்ணில் கலப்பாய்

ஒரு விண்மீனாக

என்றும் ஒளிகொடுக்கும் ஒரு சூரியனாய்!!!

மரணம் ஒரு பிறப்பே

மரணத்துக்கு அழிவில்லை!!!

உன் ஆத்மா உடம்பிலும் வாழும்

அந்த காற்றிலும் வாழும்

மரணத்தை கண்டு அஞ்சாதே

மரணத்தை விழுங்கிடு

உன் ஆன்மாவை கண்டறி

நீ சிறகின்றி பறப்பாய் சிறு பறவையாக!!!

## விதை:

விதைகள் யாவும் முளைப்பதில்லை

அது விதைத்தவனை பொறுத்து

நன்மை விதைத்தால் நன்மை வந்து சேரும்

தீமை விதைத்தால் தீ உன்னை எரிக்கும்!!!

உறங்கும் விதைகளை எழுப்புவது அந்த மழை

தவழும் விதைகளை பறக்கச்செய்வது அந்த காற்று

விதைகளின் நோக்கம் அந்த வானத்தை தொட்டுவிடுவதே

விதையில் இருந்து வளரும் வேர்கள்

அந்த மண்ணின் ஆழத்தை கண்டறிய செல்கின்றன

கிளைகளோ சிறு பறவைகள் நடனமாடும் தூணாக நிற்கின்றன

பூக்கள் தேனை தயாரித்து காத்திருக்கிறது அந்த அழகிய வண்டு வருவதற்காக

மலர்ந்து வாடும் இந்த வாழ்க்கை

மீண்டும் உயிர்பெறும் ஒரு விதையாக!!!

## பெயர் வேண்டும்:

உன்னை வந்து சேரும் எதுவும் உனதல்ல

உன்னை விட்டு செல்லும் அனைத்தும் உனதல்ல

உனக்கு சொந்தமானது உன் திறமையே

அதை விலைபேசாதே

திறமை இருப்பவன் தோற்பதில்லை

திறமை இல்லாதவன் எவனும் இல்லை!!!

உன்னை நம்பு

உன் திறமையை நம்பு

உன் வாழ்க்கை சற்று கடினமாக தான் இருக்கும்

கலங்காதே

தைரியமாக செல்

அங்கு வெற்றி காத்துக்கொண்டு இருக்கிறது

உன்னை காண!!!

உன் எண்ணம் நேராக இருக்கட்டும்

உன் சிந்தனை உண்மையாக இருக்கட்டும்

உன் நேர்மை உன்னை நிழலாக தொடரும்!!!

பறந்து செல் விண்ணை முட்டும் ஒரு ஏவுகணையாக

விழுந்திடு இந்த மண்ணில் ஒரு எரி நட்சத்திரமாக

உன் வெளிச்சம் பிறருக்கு விடிவெள்ளியாய்

உனக்கு அழிவில்லை

நீ யார்?

காட்சிப்பிழைக்குள் சிக்கி தவிக்கும் உன் ஆன்மாவுக்கு விடுதலை கொடு

நீ மலர்வாய் என்றும்

காமத்தை கொன்று விடு

அந்த வண்ணத்து பூச்சியின் அழுகு உன்னை வந்து சேரும் !!!

நீ தெரிவாய் என்றென்றும்

ஒரு ஒளியாய்!!!

நீ சேரும் இடம் இறைவனின் மடியில்!!!

எனக்கு பெயர் இல்லை

ஆனால் உயிர் உள்ளது!!!

என் தடயங்களை தேடி வா

உன்னை வரவேற்க காத்திருக்கிறோம் நாங்கள்

உல்லாச ஊஞ்சலில் அமர்ந்துகொண்டு !!!

## குழந்தயின் உலகம்:

ஒரு குழந்தயின் உலகம் மாயக்கண்ணாடியை போன்றது

அவர்களின் கற்பனைக்கு எல்லை இல்லை

அவர்களின் பார்வைக்கு இந்த உலகம் மிக அழகாக தோன்றும்

அவர்களின் தோழர்கள் பொம்மைகள்

அவர்களின் நண்பன் பறக்கும் பட்டம்!!!

அவர்களின் உலகத்தில் வேறு ஒருவர் எளிதாக
அனுமதிக்கப்படுவதில்லை

அவர்களின் உலகம் வண்ணத்தால் பூசப்படுத்திருக்கிறது

அதில் வண்ணம் தீட்டுபவர்கள்

அந்த பட்டாம்பூச்சியும்

துள்ளி குதிக்கும் அந்த முயலும் தான்!!!

அவர்களின் உலகம் சுயநலம் இன்றி இயங்கும்

அவர்களின் உலகம் கவலை இன்றி வளரும்

அவர்களே குழந்தை என்ற தெய்வம்

அவர்கள் உலகம் அழகடா!!!

## குயில்:

உன் குரலை ரசிக்காத ஆள் இல்லை

நீ கூவும் அழகு

அந்த பூவின் இதழை போன்றது!!!

நீ கூவும் அழகை பார்க்க ஆசை தான்

ஆனால் என்னை கண்டால் நீ வெட்கப்படுகிறாய்

நீ பறந்து விடுகிறாய்!!!

அழகிய குயிலே அந்த கருமையிலும்

உன் அழகே மேலோங்கி நிற்கிறது

நீ நந்தலாலா வின் குழந்தையோ?

உன் கீதம் செல்லும் திசை யார் அறிவார்

உன்னை போன்ற ஒரு அழகியே குயிலே அறியும்!!!

உன்னை போன்ற குரல் வேண்டும் என்று ஏங்கும் பாடகர்கள் ஏராளம்

தருவாயா உன் குரலை?

உன் அழகை ரசிக்கும் போக்கில் நான் என்னை மறந்துவிடுகிறேன்

ஒரு முறை பேசு என்னிடம்

நான் காத்திருக்கிறேன்!!!

## முதுமை:

ஒரு குழந்தையின் மனதை கொண்டு
ஒரு ஞானியின் குணத்தை கொண்டு
மெதுவாக தவழும் அந்த காலமே முதுமை

காட்சிகள் மங்கும்
குரல்களும் மங்கும்
கைகள் வலுவிழக்கும்
கால்கள் இயங்க யோசிக்கும்
நறைகள் பிறக்கும்

வாழ்க்கையின் கடைசி பக்கத்தை படிக்கும் தருணம்
முதல் பக்கத்தை புரட்டிப்பார்க்க தோன்றும்

மீண்டும் பிறக்க ஆசை
அதுவே முதுமை என்ற பகல் கனவு!!!

## மதுரை:

அந்த பாண்டிய மன்னனின் மண்

தமிழ் பிறந்த மண்

நம் மதுரை!!!

நாள்தோறும் திருவிழா

இரவெங்கும் கொண்டாட்டம்

மதுரை கலைஞர்களை உருவாக்கும் ஒரு பட்டறை!!!

அன்று ரோமானியருடன் உறவு வைத்துக்கொண்ட நகரம்

காலத்தால் அழியா மதுரை

என்றும் என் சொர்கமே!!!

அந்த மீனாட்சியின் கிளி

அந்த அழகரின் குதிரை

அந்த கோவலனின் பொட்டல்

அந்த திருமலைநாய்க்கரின் மஹால்

அந்த வண்டியூர் தெப்பக்குளம்

இதுவே என் அழுகிய மதுரை!!!

## மறைந்த மண்:

என்னை சுமந்த மண்

என்னை வளர்த்த பூமி

நான் ஓடி விளையாடிய தெருக்கள் எங்கே

நான் தினமும் ரசித்த வானம் எங்கே

நான் உருண்டோடிய தரைகள் எங்கே

எல்லாம் இன்று தூண்களாக நிற்கின்றன

சுவடுகள் அழிந்தன

இயற்கைக்கு கோபமோ?

நான் தான் தனுஷ்கோடி

கடலால் விழுங்கப்பட்ட பூமி!!!